ஓ
# செந்தமிழ்ச் செல்வி
திங்கள் வெளியீடு

சிலம்பு உசு | திருவள்ளுவர் ஆண்டு ககூஅங, ஆனி ஜூலை 1952 | பரல் கக

# செம்பொருட்டுணிபு
## (சித்தாந்தம்)

### மங்கல வாழ்த்து

"கல்லா னிழன்மலை, வில்லா ரருளிய
பொல்லா ரிணைமலர், நல்லார் புனைவரே."

இத்திருப்பாட்டின் விளக்கம் சிலம்பு-உசு, பரல்-கூ-இன் கண் விளக்கப்பட்டுள்ளது. எஞ்சிய குறிப்பு வருமாறு: இதன் கண் உள்ள எழுத்துக்களை ஒற்றுநீக்கி உயிர்மெய் எழுத்தாக எண்ணுறின் அடிதோறும் அவ்வாறு எழுத்துக்களாக எழுத்துக்கள் இருபத்துநான்காகும். இஃது உடல்மெய் (ஆன்ம தத்துவம்) இருபத்துநான்கினையும் குறிக்கும். இங்ஙனமே ஒற்றுக்களை எண்ணின் ல், ன், ல், ல், ர், ல், ர் என ஏழு ஒற்று எழுத்துக்கள் காணப்பெறும். இஃது உணர்வுமெய் (வித்தியா தத்துவம்) ஏழையும் குறிப்பதாகும்.

இத்திருப்பாட்டைப் புணர்வு பிரித்து எழுதின்,

புணர்வின் பிரிவு

"கல் ஆல் நிழல் மலைவு, இல் ஆர் அருள் இய
பொல்ஆர் இணை மலர், நல்ஆர் புனைவர் ஏ."

ல், ர், ள், ர், ர் என ஐந்து ஒற்றெழுத்துக்கள் காணப்பெறும். இஃது உணர்த்துமெய் (சிவதத்துவம்) ஐந்தையும் உணர்த்துவதாகும். எனவே, செந்நெறிச் செல்வர்கட்கு—சித்தாந்த சைவர்கட்கு மட்டும் உரித்தாகத் தொன்றுதொட்டு வழங்கி

வரும் மெய்கள் (தத்துவம்) முப்பத்தாறு. அவை உடல்மெய், உணர்வுமெய், உணர்த்துமெய் என முத்திறப்படும். அவற்றை ஆன்ம தத்துவம், வித்தியா தத்துவம், சிவ தத்துவமெனவும் வழங்குவர்.

நாலா றுயிர்மெய்யும் நண்ணு முடல்மெய்யாம்
பாலாரேழ் ஒற்றும் பகருணர்வாம்—நூலாற்
பிரிப்பிலாம் ஐந்தும் பெருகுணர்த்து மெய்யாம்
விரிப்புகல்லால் பாட்டுறையாம் மிக்கு.

இவ்வுண்மை,

மெய்யின் தொகை

" தத்துவம் எண்மூன் றுஞ்சென் றூன்ம தத்துவத் தொடுங்கும்
வித்தையின் ஒடுங்கும் ஆறும் சிவத்தினில் ஒடுங்கு மூன்றும்
நித்ததத் துவம்இம் மூன்றும் என்பர்கள் இரண்டும் நின்ற
சுத்தமாம் சிவத்தொ டுங்கும் தோற்றமும் இதுபோ லாகும்."

—சிவஞானசித்தியார், உ. ௩-கசூஉ.

என்னும் திருப்பாட்டால் உணர்க.

" அறுநான்க சுத்தம் அதிசுத்தா சுத்தம்
உறுமேழு மாயை உடனைந்தே சுத்தம்
பெறுமா றிவைமூன் றுங் கண்டத்தாற் பேதித்து
உறுமாயை மாமாயை ஆன்மாவி னோடே."

—திருமந்திரம், அ. எ-சுக.

இத் திருமூலர் திருப்பாட்டும் முத்திறத்துமெய் (தத்துவம்) கள் முப்பத்தாறினையும் முறையே குறிப்பது காண்க.

செந்நெறிச் சிறப்பு

" ஆகின்ற தொண்ணூற்றே டாறும் பொதுவென்பர்
ஆகின்ற ஆறாறு அருஞ்சைவர் தத்துவம்
ஆகின்ற நாலேழ் வேதாந்தி வயிணவர்க்கு
ஆகின்ற நாலாறை யைந்துமாயா வாதிக்கே."

—திருமந்திரம், அ. ௪-க௩.

இதன்கண் சித்தாந்த சைவர்க்கேயுரிய மெய்முப்பத்தாறும் குறிக்கப்பெற்றமை காண்க.

மெய்யின் விளக்கம்

உடல்மெய் இருபத்துநான்கு: பூதம் ஐந்து, பூதமுதல் ஐந்து, அறிபொறி ஐந்து, தொழிற்பொறி ஐந்து, அகப்புறக் கலன் (அந்தக்கரணம்) நான்கு.

உணர்வுமெய் ஏழு : தூவாமாயை, காலம், ஊழ், (நியதி) கலை, அறிவு, (வித்தை) விழைவு (அராகம்).

உணர்த்துமெய் ஐந்து : அறிவு, ஆற்றல், அன்பு, ஆட்டல், ஊட்டல். (சிவம், சத்தி, சதாசிவம், ஈசுவரம், சுத்தவித்தை.)

## அவையடக்கம்

### மெய்யுணர்வு

"தம்மை யுணர்ந்து தமையுடைய தன்னுணர்வார்
எம்மை யுடைமை எமையிகழார்—தம்மை
உணரார் உணரார் உடங்கியைந்து தம்மிற்
புணராமை கேளாம் புறன்."

**இதன் பொருள்:** தம்மை - அடிமையாகிய தம் இயல்பினை; உணர்ந்து - அருளால் உணர்ந்து; தமை உடைய - தம்மை உடைப் பொருளாகக்கொண்டு ஓம்பியருளும்; தன் - உடையானாகிய தலைவனை; உணர்வார் - உணரும் செம்பொருட்டுணிவின ராகிய சித்தாந்த சைவர்; எம்மை உடைமை - எம்மை ஆண்டவன் தொடர்பால் தமக்கு உடைமையாகக் கோடலின்; எமை இகழார் - எம்மைக் குற்றம் நீக்கிக் குணங்கொண்டு கோதாட்டுவ தல்லாமல் இகழ்தல் செய்யார்; தம்மை உணரார் உணரார் - தம்மையுணராதார் தம்மையுடையானாகிய தலைவனையும் உணரார். உடங்கு இயைந்து தம்மிற் புணராமை - ஒருங்குகூடித் தம்மில் தாமே சேராது முரணுதலால்; புறன் கேளாம் - எம்மையும் எம்மாற் செய்யப்படும் நூலையும் இகழும் இகழ்வுரையை ஒரு பொருளாகக் கொள்ளாம்.

### உறவு

செய்தவப்பேற்றால் மெய்யுணர்வு கைவந்த சிவனடியார் மற்றோர் அடியவர்க்கு உறவினராவர். இது, பிள்ளைகட்கு அவர்தம் பெற்றோரின் உறவினர் அனைவரும் உறவினர் ஆவது போலாம். மாணவர்க்கு ஆசான் உறவினரும், குடிகட்கு வேந்தன் உறவினரும் உறவினர் ஆவது போன்றும் ஆகும். முன்னை ஆர் தொடர்புடையார் பின்னையாரைப் பிழைநீக்கிப் பெரிதும் பாராட்டுவர். இது,

"பத்துடையீர் ஈசன் பழஅடியீர் பாங்குடையீர்
புத்தடியோம் புன்மைதீர்த்து ஆட்கொண்டால் பொல்லாதோ."

—அ. திருவெம்பாவை, ௩.

**இதன் பொருள்:** ஆண்டவன்பால் அவனருளால் கொள்ளும் அன்பும், அங்ஙனமே அவனை அறியும் அறிவும், அவன்

அருள்வழி நிற்கும் ஆற்றலும் உடையோர் இறைபணியாளராம் பழஅடியார் ஆவர். அவர்கள் தவப்பேற்றால் அன்பு, அறிவு, ஆற்றல்கள் மூன்றும் முக்கண்ணன்பால் வைத்தொழுகும் மெய்யடியார்களின் தாழ்வகற்றி அவர்களை நல்வாழ்வில் வைப்பர். இது, தேறிய மாணவர் தேறலுற்றார்க்கு ஊறு செய்யாது உறு துணையாவது போன்றாகும்.

**மாண்பு**

சித்தாந்த சைவரின் உயர்வும் ஏனைய நெறியினரின் இழிபும் இதன்கண் கூறப்படுகின்றன. சித்தாந்த சைவர் உண்மை உணர்ந்த ஒண்மையர். அதனால், அவர்கள் எவரையும் இகழ்ந்து கூறார். யாவரையும் புகழ்ந்து கூறுவர். யாவரும் படிமுறையான் உணர்த்த உணரும் அறிவினர். அவர்கள் தத்தம் நெறியில் நிற்பினும் மேலோரை நோக்க உயரவேண்டும் பான்மையரே. அதனால் நன்மைக்கு மாறுசெய்வாரே இகழ்தற்குரியர். வேறுபடுவார் திருந்துவார் என்று புகழ்தற்குரியரே யாவர். இதுவே பெரியோர் செய்கை. இத்தகைய பெரியோரே சித்தாந்த சைவராவர். ஏனையோர்-ஏனைச் சமயத்தினர், பிறரை இகழ்ந்துரைப்பர். பிறரை இகழ்வது தம்மை இகழ்வதே என்னும் எண்ணம் அவர்களுக்குத் தெரிவதே இல்லை. தெரியுமேல் அங்ஙனஞ் செய்யார்.

**தம்முள் முரணுதல்**

காட்சியளவையான் உணரப்படுவதே உண்மை என்பர் ஒரு சாரார். இவர்களை உலகாயதர் என்பர். இவர்கள் நிலன், நீர், நெருப்பு, உயிர்(காற்று) என்னும் பூதம் நான்கு. இவற்றின் கூட்டத்தால் உணர்வுண்டு. இவற்றையல்லாமல் கடவுளும், உயிரும், வினையும், பிறப்பும் உண்டென்பது பொய். பூதம ஐந்து கொள்ளினும் அறிவுடைய உயிர் ஒன்று உண்டு எனக்கொள்ளார் புத்தர். இவர்களை யொத்தவர்களே, சாங்கியர், மாயாவாதிகள். கடவுளுக்குத் தாம் உடைமை என்று உணராத கொள்கையினரும் இவர்களுள் அடங்குவர். கடவுளின் உண்மைத் தன்மை உணராதோரும் இவர்களோடு ஒத்தவரே யாவர்.

இவர்கள் அனைவரும் முப்பொருள் உண்மை உணர்ந்த 'சித்தாந்த சைவருடன்' முரண்படுவர். அவர்களை இகழ்வர். இவ்விரண்டினும் ஒன்று பட்டாலும் தத்தம் கொள்கையில் மாறுபட்டுக் கலாம்விளைப்பர். ஆதலால் இவர்கள் சொல்லைக் கேளாம் என்றனர்.

சித்தாந்த சைவர் இவர்களுள் எவரையும் இகழார். காரணம்: முழுமுதல்வன் திருவருளால் இவர்கள் அனைவரும் ஒரு காலத்துச் சித்தாந்த சைவச் செந்நெறியைச் சேர்வர் என்னும் குறிக்கோளுடைமையே. பருவமுதிர முதிர அரும்பு கனியாவது போல் கனிவர். மாணவன் ஆசான் ஆவதுபோல் ஆவர். மேலும்,

"அற்ற மறைக்கும் பெருமை சிறுமைதான்
குற்றமே கூறி விடும்." —திருக்குறள், கூ௮0.

என்னும் செந்தமிழ்ப் பொதுமறையின்படி குணநலங் கூறுவதே சான்றோர் மனநலமும் இனநலமும் ஆகும்.

உணருநெறி

கடவுளை யுணர்ந்து தம்மை யுணரவேண்டுமென்பது முதற்படி. தம்மை யுணர்ந்து கடவுளை யுணரவேண்டு மென்பது மேற்படி. கடவுளை உணரும் நெறி நால்வகைப்படும். அவை, காண்டல், கருதல், கலத்தல், கனிதல் என்பன. இவற்றுள் காண்டல் கருதல் இரண்டற்கும் கடவுளை உணர்ந்து தம்மை உணரவேண்டும். கலத்தல் கனிதல் இரண்டற்கும் தம்மை யுணர்ந்து கடவுளை யுணரவேண்டும். இது,

மாம்பழத்தைக் காண்டலும், கருதலும் கடைக்காரரால் ஆம். பெறுதலாகிய கலத்தலும் துய்த்தலாகிய கனிதலும் வாங்குவோரால் ஆம். காதலரிருவருள் காண்டற்கும் கருதற்கும் இடம் தலைவனும், கலத்தற்கும் கனிதற்கும் இடம் தலைவியும் ஆம் உண்மையும் இதன் ஒருபுடை ஒத்துநோக்கற் பாலன.

பெற்றோர்களால் *பிள்ளைகள் தங்கள் பெயர், ஊர், பொருள், உறவு முதலியவற்றை முதற்கண் உணருவர். இது கடவுளால் உயிர்கள் தம்மை உணர்வதை யொக்கும். அதன் பின், பிள்ளைகள் பொருளொடும் உறவொடும் பொருந்திவாழ்வர். இது, தம்மைபுணர்ந்து கடவுளை யுணர்வதாகும். ஈண்டு உணர்வது என்பது உரிமையும், பற்றுக்கோடும், பயன்துய்ப்பும் பாங்குறப் பயிறலாகும்.

—இதழாசிரியர்.

---

*பிள்ளைகள் பெற்றோரால் பேரூர் உறவுணர்வர்
கொள்வர்தம் மாலவர்பால் கூடுகுணம்—விள்ளுமெய்ந்நூல்
காண்டல் கருதல்வழிக் கண்ணுதலாற் றானறிதல்
ஈண்டுகலத் தல்கனித லெண்.

# *விண்ணப்பம் ஒன்று

[திரு. சோ. கு. மதுரைநாயகம்]

கல்லால் நிழல்மலை, வில்லார் அருளிய
பொல்லார் இணைமலர், நல்லார் புனைவரே.

சித்தாந்தத் தேனருந்திச் செம்மாந்திருக்கும் பெரியோர்களே! தாய்மார்களே! சகோதரர்களே! குழந்தைகளே! உங்கள் அனைவருக்கும் எனது வணக்கமும் நன்றியும் உரியவாகும்.

நான் பேசுவதற்கு எடுத்துக்கொண்ட பொருள் 'விண்ணப்பம் ஒன்று' என்பது. ஆதலின் முதலில் உங்கள் அனைவருக்கும் ஒரு விண்ணப்பம் செய்துகொள்ளுகின்றேன்.

திருவுரு

அன்பர்களே! சென்ற பதினைந்து நாட்களாக இங்கு நடைபெற்றுவரும் சித்தாந்த நிகழ்ச்சிகளைக் கண்டும் கேட்டும் இன்புற்றிருக்கும் உங்கள் எல்லோரையும், மானசீகமாக இப்பொழுது நான் கைலாயகிரிக்கு அழைத்துச் செல்கின்றேன். ஏனெனில் சித்தாந்தச் செல்வர்களாய் விளங்கும் உங்கட்கு கைலைநாதனாகிய பெருமான் ஆசி வழங்க அதோ! வருகின்றான். அப்பெருமானை எதிர்கொண்டு அழைக்க வேண்டாமா? பாருங்கள்!

'குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயில் குமிண் சிரிப்பும், பனித்த சடையும், பவளம்போல் மேனியில் பால் வெண்ணீறும்,' உடையானைய், ஒருபால் உமையம்மையும், இருவருக்கும் நடுவில் ஞானக்குழந்தையாகிய முருகப் பெருமானும் முறுவல் பூப்ப நந்தியம்பெருமான் மீதமர்ந்து, விண்ணினின்றும் காட்சி தருகின்றனன். இத்தகைய மானதக் காட்சியே உண்மைக் காட்சியாய் அமையுமாறு செய்யவல்ல உயர்சிவஞானபோதத்தை என்போன்ற அன்பர் பலருக்கும் போதிக்க வகை செய்த பெரியார்கட்கும், சிறப்பாக நெல்லைச் சைவசித்தாந்த சங்கத்தார்க்கும், இச்சங்கத்தார்க்கு உற்ற துணையாகவிருந்து உள்ளம், உரை, செயல்களால் பெரும்பணிபுரிந்த நெல்லைச் சந்திப்பு, தருமபுரமடத்து அருணகிரி இசைக் கழகத்தார்க்கும் எனது அன்பான வணக்கத்தையும் நன்றியையும் தெரிவித்துக் கொள்கின்றேன்.

---

* நெல்லைச் சித்தாந்த வகுப்பில் நிகழ்த்திய சொற்பொழிவு.

### இன்றியமையாமை

அன்பர்களே ! இன்னும் ஒரு விண்ணப்பம்.

எல்லா நலன்களும் அமையப்பெற்ற நம் தென்பாண்டி நாட்டில், 'என்றும்உள தென்றமிழ் இயம்பி இசைகொண்டா' ஞகிய அகத்தியமுனிவன் வாழும்பேறுபெற்ற பொதிகையமைந்த இத்திருநாட்டில், சிவஞானம் கைவரப்பெற்ற குமரகுருபரரும், மாதவச் சிவஞான சுவாமிகளும் பிறந்த இப்பொன்னுட்டில், நம் செந்தமிழ் நூல்களைக் கற்பதற்கு விழைந்து நிற்கும் தமிழ் இளைஞர்க்கு ஏற்றதொரு செந்தமிழ்க் கல்லூரி இல்லாமலிருப்பது பெருங்குறைபாடேயாகும். சென்ற பதினைந்து அல்லது இருபது வருடங்களாக இம்மாவட்டத்திலிருந்து தமிழ் வித்து வான் வகுப்பிற் சேர்ந்து பயிலும் மாணவர்கள் இருநூறு மைல் களுக்கு அப்பாலுள்ள தஞ்சையையோ, அதற்கப்பாலுள்ள பிற இடங்களையோ சார்ந்து பயிலவேண்டியதிருக்கிறது. இக் குறையை நீக்கவேண்டியது நம் கடமையல்லவா ? வருங்காலத்து நம் இளைஞர்கள் இவ்வுலகத்து வாழ்வாங்கு வாழ்ந்து, நமது அரும் பண்புகளைக் காக்க வல்லவர்களாய் ஆக்கவேண்டிய பொறுப்பு நம்மையே சார்ந்ததாகும்.

### வாய்ப்பிடம்

ஆதலின், வடபால் தஞ்சையைச் சார்ந்துள்ள திருவை யாற்றில் பொய்யா வளஞ்சுரக்கும் பொன்னியாற்றங்கரையில் பொலிவுடன் விளங்கிவரும் அரசர் கல்லூரியைப்போல, தென் பால், தண்ணூரமுதளிக்கும் தண்பொருநையாற்றங்கரையில், இயற்கைவளஞ் செறிந்த பொதிகைமலைச் சாரலில், நம் சமயவறி வுடன் இயல் இசை நாடகமாகிய முத்தமிழும் விரவிக் கலந்து பயிற்றுவிக்கும் செந்தமிழ்க் கல்லூரி ஒன்று நிறுவப்படல் வேண்டும். விரும்பும் மாணவர்க்கு வேண்டும் அறிவுக்கலைகளைப் பயிற்றுவிக்கும் கவி. தாகூரின் சாந்திநிகேதனம்போல, இத் தென்னுட்டில் கலைக்கோவில் ஒன்று திகழ்தல் வேண்டும். அதற் குரிய செல்வம் இந்நாட்டில் தக்கார் பலர் புறப்படின்தானே கைவரும்.

### திருமடத் தொடர்பு

பல்லாண்டுகளாக நம் செந்தமிழ் மொழிக்கும் சைவ நல்நெறிக்கும் தாயகமாக விளங்கிவரும் துறைசையாதீனம், தருமையாதீனம், பனசையாதீனம் ஆகிய மூன்று ஆதீனங் கட்கும் நம் நெல்லைமாவட்டத்தில் மிகுதியும் தொடர்புண்டு,

அவ்வாதீனங்களின் கர்த்தர்களாகிய மகா சந்நிதானங்கள் இம் மாவட்டத்திலிருந்து கிடைக்கும் ஓராண்டு வருவாயில் ஒரு பகுதியை மனமுவந்தளிப்பார்களேயானால் மிகவும் அழகிய முறையில் செந்தமிழ்க் கல்லூரி ஒன்று நிறுவிவிடலாம்.

அன்றியும், இம்மாவட்டத்திலேயே நம் செந்தமிழ்த்தாய்க்கு அள்ளிக்கொடுக்கும் சீரியோர் பலர் இருக்கின்றனர். நமக்கு ஆசிரியராக அமர்ந்து விளங்கும், திரு. முதலியார் ஐயா அவர்களும், சிவஞான சுவாமிகளின் பரம்பரையில் வந்த பெரியாராகிய அம்பை. திரு. சிவஞானம்பிள்ளையவர்களும், இன்னும் தக்கார் பலரும் சேர்ந்து முயன்றால், விரைவில் இந்நாட்டில் பெருமைமிக்க கலைக்கோவிலைக் கண்டு மகிழலாம். நம் எண்ணம் நிறைவெய்த எல்லாம் வல்ல பெருமான் துணை புரிவானாக.

வாழ்க தமிழ், வளர்க சைவம்,
வெல்க நெறிநின்றார் தொண்டு.

---

## அருள் விண்ணப்பம்

"பொன்னார் திருவடிக் கொன்றுண்டு
விண்ணப்பம் போற்றிசெய்யும்
என்னாவி காப்பதற் கிச்சையுண்
டேலிருங் கூற்றகல
மின்னாரு மூவிலைச் சூலமென்
மேற்பொறி மேவுகொண்டல்
துன்னார் கடந்தையுள் தூங்கானை
மாடச் சுடர்க்கொழுந்தே."

—ஆளுடைய அரசு, ச. ௧௧0 ௧.

ஆளுடைய அரசு புன்னெறி அகன்று நன்னெறி புக்கனர். புக்கவர் தம் அருமைத் தமைக்கையாரால் ஐந்தெழுத்தோதி வெண்ணீறு அணியப்பெறினும், ஆண்டவனாலும் அடையாளம் பெற வேண்டினர். அப்பொழுது பாடிய திருப்பாட்டாகும் இது. இதன்கண் வலத்தோளிற் சூலமும் இடத்தோளில் இடவமும் பொறிக்கப்பெற்றவராகக் கொள்க. இவை முறையே துன்ப நீக்கமும் இன்ப ஆக்கமுமாகும்.

—இனியன்.

---

இஃது ஓர் ஆட்டுக்காரன் பாடியது. இதனை நான் கேட்ட வுடன் எனக்கோர் ஆட்டம் உண்டாகியது.

இதன் தத்துவக் கருத்தாவது: ஆணவத்தால் மறைப் புண்டு கிடந்த ஆன்மா ஆண்டவன் அருளை நாடுகிறதென்பது.

வேறொரு பொருள். கருநிறமுள்ள ஆடு கருவேலங்காய் தின்ன மலைமீது ஏறுகிறதென்பது.

ஆடு - ஆன்மா, ஆடு. கருவூலம் - கடவுள், கருவேலம் எனத் திரிந்து நின்றது. மேல்மலை என்பது மேமலை என மருவியது. கைலையைக் குறிக்கும்.

"செம்புள்ளியாட் டுக்காரா சிவத்த மச்சான் ஏகொழுந்தா
சேத்தே வளந்தி யானுச் சேத்திருவேன் ஓமேலே"

இது தலைவி, தலைவன்மீது காதல் மீக்கூர்ந்து பாடியது. அகப்பொருட் கருத்து நிரம்பியது.

இதன் தத்துவக் கருத்தாவது: சிவந்த புள்ளிகளையுடைய புலித்தோலாடை யணிந்த செம்மேனிக் கூத்தப்பெருமானே! என்மீது உன் கருணையைக் கொஞ்சம் காட்டினுல் உன்னோடு இரண்டறக் கலந்து இன்புறுவேன் என்பது வேறு ஒருபொருள்.

செம்மறியாடு மேய்க்கின்ற ஏ மச்சான், என்மீது உன் அன்பு மிகுமானுல் நாமிருவரும் ஈருடல் ஒருயிராகக் கலந்து விடுவோம் என்பது.

ஆட்டுக்காரன் - நடராசப்பெருமான். சிவத்த - செம்மையான. சற்றே என்பது, சத்தே என்று மாறி, செத்தே என வந்தது. உன்மேலே என்பது ஓமேலே என வந்தது.

இவைபோன்று இன்னும் பல தெம்மாங்குப் பாட்டுக்களும், ஏற்றப் பாட்டுக்களும், தாலாட்டுப் பாட்டுக்களும், அழுகைப் பாட்டுக்களும், விளையாட்டுப் பாடல்களும் எண்ணிறந்தனவாய்ச் சைவ மணங்கமழ்ந்து பரவிக்கிடக்கின்றன. சைவ சித்தாந்த சங்கத்தார் அவற்றையெல்லாம் ஆராய என்னைத் தூண்டிவிட்டனர். சமயம் வாய்க்குமிடத்து அவற்றை நம் செல்வி வாயிலாகத் தொகுத்தெழுதுவேன். நமக்குச் சைவ சமயமாகிய இதுவே நல்ல சமயம். இதனைப் பரப்ப இதுவே நல்ல சமயம் என்று மறுமுறையும் கூறி என்னைச் சொற்பொழி வாற்றச் செய்த உங்களுக்கு நன்றி கூறி என் சிற்றுரையை முடிக்கிறேன்.

---

# *திரு உந்தியார்

[திரு. வித்துவான், ந. சேதுரகுநாதன்]

திரு உந்தியார் என்ற அருமையான நூல் திருவியலூர் உய்யவந்த தேவநாயனாரால் இயற்றப்பட்டது. பேரின்ப வெள்ளத்தில் நீந்தித் திளைத்த உவகை மேலீட்டால் கொந்தளித்துத் துள்ளி விழுந்த உள்ளமானது, உந்திஉந்திக் குதித்து உந்தியார் என்ற பாடல்களை வெளியிட்டது. பேரின்பம் நுகர்ந்து நுகர்ந்து தோய்ந்த அவரது அருமையான திருவுள்ளத்திலிருந்து வந்த பாடல்கள் நினைக்குந்தோறும் பேசுந்தோறும் உணருந்தோறும் அனைத்தெலும்பும் உள்ளே நெகிழும்படி ஆனந்தத் தேன்சொரியும் இறைவனைப்போல இன்பமான பாடல்கள். என்றாலும் அதனை உணர்வதற்கு மாசற்ற உள்ளம் வேண்டும். "தீதற்றோர், உள்ளுதோ றுள்ளுதோ றுள்ளம் உருக்கும்," என்பது திரு உந்தியாருக்குச் சாலவும் பொருந்தும். பூவின் நறுமணத்தை உணருதற்கு மூக்கு வாயிலாக உள்ளது. மூக்கினாலன்றி மணம் உணரமுடியாது. அதுபோல இறைவனை உணர்ந்து துய்ப்பதற்கு உடம்பில் குறிப்பிட்ட இடம் உண்டு. அந்த இடத்தை முனிவர்களும், தவச்செல்வர்களும் மிகவும் மறைபொருளாக வைத்திருக்கின்றார்கள். அவர்களால் உணர்த்தப்பட்டாலன்றி இறைநிலையை உணரமுடியாது. குருவருளின்றிச் சைவசித்தாந்தம் உணருவது ஒருநாளும் முடியாது.

"ஒருகோடி ஆகமங்கள் எல்லாம் உணர்ந்தும்
பெருகுதவம் சித்தியெல்லாம் பெற்றும்—குருவருளால்
வைத்த படியிருக்க மாட்டாத மாந்தருக்குச்
சித்தசல னம்மாந் தினம்"

என்று அருளிச்செய்த குருஞானசம்பந்த சுவாமிகளின் சிவபோகசாரத் திருமொழிகளையும் நோக்குங்கள். உயிர்நிலைக்கும் இறைநிலைக்கும் இடையில் மறைத்து நிற்கும் மாயைத் திரைக் கூட்டங்களே தத்துவங்கள். அந்தத் திரைகள் ஒடுங்கினாலன்றி இறைவனைக் காணுதல் இயலாது. உயிர்நிலையை உணர மனநிலையை உணரவேண்டும். இறை நிலையை உணர இவைகளெல்லாம் கட்டாயம் தெரிதல்வேண்டும். தமிழ்நாட்டில் இந்த அரியமறையை நெடுங்காலமாகவே பெரியோர்கள் உணர்ந்து வைத்திருக்கின்றார்கள். மாயைத் திரையை ஒடுங்கச் செய்வதே தீட்சை என்று கூறப்படும். அது ஏமாற்று வித்தையல்ல. அது உண்மையான பேரின்ப வெள்ளத்தில் திளைக்கச் செய்யும் வழி.

---

* நெல்லைச் சித்தாந்த வகுப்பில் நிகழ்த்திய சொற்பொழிவு.

" உரையிறந்தால் உன்னும் உணர்விறந்தால் மாயைத்
திரையிறந்தால் காண்கின்ற தேவை—வரைபெருக
வாசிப்பதும் வாயால் வாழ்த்துவதும் நாடகமாய்ப்
பூசிப்பதும் சுத்தப் பொய்."

வாசிப்பது வாழ்த்துவது பூசிப்பது வேண்டாமென்பது அல்ல கருத்து. மாயைத் திரை நீங்கிய பின்புதான் வாசிப்பதும் பூசிப்பதும் வாழ்த்துவதும் பயன்படும். நினைத்த அளவில் நினைவு அழியும்படி உருகிப் பாய்ந்து உவட்டாத இன்பம் ஊட்டு வாள் இறைவி. யாருக்கு? இறைநிலையை உணர்ந்தவருக்குத் தான். அதைத்தான் உந்தியார் கூறுகிறது.

" கருதுவ தன்முன் கருத்தழியப் பாயும்
ஒருமகள் கேள்வன்என் றுந்தீபற
உன்ன அரியன்என் றுந்தீபற."

என்பது உணர்ந்து துய்த்துக்கூறிய திருமொழி. குரு குறிப் பிட்டு உணர்த்திய இடத்தை நோக்கிய அளவில் இறைவன் குழைந்து உருகி இன்பந் தருவான்.

" தாக்கியே தாக்காது நின்றதோர் தற்பரம்
நோக்கிற் குழையுமென் றுந்தீ பற
நோக்காது நோக்கவென் றுந்தீபற."

என்பதன் உண்மையைத் துய்த்து உணரவேண்டும். உள்ளும் புறம்பும் நினைப்பற்று உன்னுள்ளே சுரக்கும் மொள்ளா அமுத வெள்ளத்தில் திளைக்க உந்தியாரைப் போல உதவுகின்ற நூல் எது? அதனை உணர்கின்றவர்கள்தாம் சிறந்த தவம் உள்ளவர் கள். தமிழுலகம் அத்தகைய அரியநெறியை அடைவதாக!

---

## ஒப்புமை

" அன்றிவரும் ஐம்புலனும் நீயும் அசையாதே
நின்றபடி யேசிற்க முன்னிற்கும்—சென்று
கருதுவதன் முன்னம் கருத்தழியப் பாயும்
ஒருமகள்தன் கேள்வன் உனக்கு."

" ஆக்கப் படாத பொருளாய் அனைத்தினினும்
தாக்கித்தான் ஒன்றூடும் தாக்காதே—நீக்கியுடன்
நிற்கும் பொருளுடனே நிற்கும் பொருளுடனுப்
நிற்கை நிராதார மாம்."

—திருக்களிற்றுப்படியார்-ருடு, உசு.

# *சைவசித்தாந்தத்தின் தொன்மை

[By டாக்டர் தி. இரா. அண்ணுமலைப்பிள்ளை
L. C. P. S., L. M. S. S. A. Lond. திருக்குற்ருலம், (தென்காசிவழி)]

**சைவசித்தாந்தப் பொருள்**

சைவசித்தாந்தம் என்னும் சொற்ருெடரின் பொருள் என்னை? சிவசம்பந்தமானது சைவம் என்பது திருமந்திரம். சித்தாந்தம் என்பது முடிந்த முடிபு. சிவம் என்னும் திருப் பெயர் தென்ஞட்டில் எல்லாம் வல்ல முழுமுதற்கடவுளைக் குறிக்கும். சித்தாந்தம் என்னும் சொல் தென்னிந்தியாவில், பல்லாயிர ஆண்டுகளாக எட்டுத்திசைகளிலும் வழங்கப்பட்டு வருகின்றது. தொன்மை என்பது பழமை. ஆகவே, சிவசம் பந்தத்தைத் தன் அறிவாலும் அள்வைகளாலும் ஆராய்ந்து சிந்தித்து இறைவன் அருளால் தெளிந்து, அவனுடைய திருத் தாள்களைத் தன் பட்டறிவிற் (அனுபவத்திற்) கண்டு அறுதி யிட்டு முடிவுகட்டிய திருநெறியே 'சைவ சித்தாந்தம்' ஆகும்.

**சிவன் என்னும் சொல் விளக்கம்**

சிவன் என்னுஞ்சொல் தமிழ்ச்சொல் என்றும் 'சி' என்னும் ஓசை (Cerebral) தென்னிந்திய மொழிக்கே உரியதென்றும், சிவன் கோயில்கள் பண்டைக்காலத்தில் வடஅமெரிக்காவிலும் மற்றும் வேறு கண்டங்களிலும் பரவி இருந்தனவென்றும், சிவன் என்னுஞ்சொல்லும் அல்லது அதன்திரிபும், உலகத்தில் எங்கும் ஊர்களுக்கும், மலைகளுக்கும், இலிங்கத்துக்கும், திருக்கோயில் களுக்கும் ('சிவ' என்னுஞ் சொல்லின் பொருள் தெரிந்தும் தெரியாமலும்) வழங்கப்பட்டு வருகின்றதென்பது ஆராய்ச்சி வல்லுநர்கள் கூற்று. எந்நாட்டவர்க்கும் இறைவனய் விளங்கு கின்றவன் தென்ஞட்டில் 'சிவன்' என்றழைக்கப்பட்டனன்.

"யாதொரு தெய்வங் கொண்டீர் அத்தெய்வ மாகி ஆங்கே
மாதொரு பாக ஞர்தாம் வருவர்"

என்று அருணந்தி சிவமும்,

"விரிவிலா அறிவி ஞர்கள் வேருெரு சமயம் செய்து
எரிவினுற் சொன்ஞ ரேனும் எம்பிராற் கேற்ற தாகும்"

என்று அப்பர் அடிகளும் கூறியவாறு, பல சமயங்களையும் தத்துவ அடிப்படையில் முறைப்படுத்தித் தன்னுடன் பிணைத் துக் கொள்ளும் பரந்த நோக்கம் (Catholicity) சைவ சமயத்திலே சிறப்பாகக் காணப்படுகின்றது.

---

* நெல்லைச் சித்தாந்த வகுப்பில் நிகழ்த்திய சொற்பொழிவு.

ஆண்டவன், உருவமாயும், அருவமாயும், அருவுருவமாயும், தத்துவங்கடந்த தனிப்பொருளாயும் உள்ளவன் என்பது சைவ சித்தாந்தத்துக்கு அடிப்படையாகும்.

சைவசித்தாந்தக் கொள்கைகளுக்கும் விஞ்ஞானக் கருத்துக் களுக்கும் நெருங்கிய பொருத்தங்காணப்படுகின்றது.

சைவசமயக் கொள்கைகளுக்கும் தமிழ்நெடுங்கணக்கு எழுத்துக்களுக்கும் சிறந்த ஒற்றுமை காணப்படுகிறதென்பது எம்போலிகளின் துணிவு.

சிவ வழிபாடு புதுக் கற்காலத்திலேயே (New Stone age) 20000 (இருபதினாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே) தொடங்கிய தென்பது ராப்சன் பேராசிரியர் (Prof. Rapson) "Ancient India" என்னும் நூலிற் குறித்துள்ளனர். சரித்திரகாலத்துக் கும் முந்தியது சைவசமயம் என்பது டாக்டர் போப் (Dr. Pope) அவர்களின் உறுதிமொழி. சர் ஜான் மார்ஷல் துரை, "உலகத் திலேயே பழமைவாய்ந்ததும் இன்றும் நிலவி வருவதும் ஆகிய சமயம் சைவசமய மென்றும் ("the most ancient living faith in the world") வலியுறுத்துகின்றனர்.

**சைவமும் புதைபொருள் ஆராய்ச்சியும்**

சிந்து ஆற்றங்கரை ஓரங்களில், மொகஞ்சதாரோ, ஹரப்பா என்னும் மறைந்த நகரங்களில், புதைபொருள் ஆராய்ச்சியாளர் கள் கண்டெடுத்துள்ள பொருள்களே நம்நாட்டு வரலாற்றிலே மிகத் தொன்மையானவை. இவ்வூர்களிற் பரவியிருந்த நாகரிகம் ஏறக்குறைய ஆறாயிரம் (6000) ஆண்டுகளுக்கு முந்தியதென்பர் விஞ்ஞானிகள் (Geologists and Archaeologists). இலிங்கம், சங்கு, யானை, இடபம் (காளை-நந்தி), வேல், பாம்பு முதலியனவும், இவைபோன்றவை பொறிக்கப்பட்டுள்ள நாணயங்கள் அழிந்து போன இந்நகரங்களில் மலிந்து காணப்பட்டுள்ளன. பண்டைக் காலத்தில் நம்முன்னோர், திங்கள், நாள், கோள், மீன் இவைகளுக் குத் தகுந்தாற்போல் பெருமானையும் பெருமாளையும் மற்றும் பல திருவுருவங்களையும், முழுமுதற் கடவுளின் பல தோற்றமாக நினைந்து வணங்கி வந்தனர். "சிவன் சத்தி" யென்பது இரண்டு பொருளல்ல. சிவனின்றிச் சத்தியில்லை, சத்தியின்றிச் சிவனில்லை என்னும் கருத்துக்கேற்ப, முழுமுதற்கடவுள் "ஒருவன் என்னும் ஒருவன்" என்று கொண்டனர். ஆதலின் திருமூலர்,

"ஆதிப் பிரானும் அணிமணி வண்ணனும்
ஆதிக் கமலத்து அலர்மிசை யானும்
சோதிக்கில் மூன்றுந் தொடர்ச்சியில் ஒன்றெனர்."

யென்று கூறிப்,

"பேதித் துலகம் பிணங்குகின் றார்களே."

என்று வருந்துகின்றனர்.

**முப்பொருள் வாய்மை**

இலிங்கமும் நந்தியும் காணுமிடமெல்லாம், அவைகளின் குறிப்பென்னை? வரம்பில்லாத ஆற்றலுடைய ஆண்டவன் முன்னிலையில், பக்குவப்பட்ட உயிரானது (ஆன்மா) ஆண்டவன் திருவடிகளை அணுகி, என்றும் மீளா இன்பத்தைத் துய்த்துக் கொண்டேயிருக்கின்றது என்பதேயாகும். இத்தகைய கடவுட் கொள்கை மொகஞ்சதாரோயர் காலத்திலேயே திருந்திய முறையில் காணப்பட்டதாயின், அக்காலத்துக்கு 3000, 4000 ஆண்டுகளுக்கு முன்னரேயே அச்சமயம் அந்நாட்டில் தொடங்கியிருக்க வேண்டுமென்று கூறுவது அறிவுக்குப் பொருத்தமேயாகும். ஆகவே சைவசமயம், பதினாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரேயே நமது நாட்டில் திளைத்து முதிர்ந்திருந்ததென்பது புதைபொருள் ஆராய்ச்சியினின்றே மலையிலக்காக விளங்குகின்றது.

மொகஞ்சதரோவில் வழங்கிவந்த சித்திர எழுத்துக்களைப் பற்றி ஐம்பது ஆண்டுகளாக ஓயாது உழைத்துத் தெளிந்து முடிவுகட்டிய ஹீராஸ் முனிவர் (Rev. H. Heras), அக்காலத்திலேயே, கடவுள், முக்கண்ணன் (சிவன்), முருகன் முதலிய திருப்பெயர்களைக் குறிக்கும் சித்திர எழுத்துக்கள், அந்நாட்டு நாகரிகத்தில் முனைத்திருந்தனவென்று மிகத் திறம்பட உறுதிப் படுத்தியுள்ளனர்.

**சைவமும் தமிழ் இலக்கியமும்**

தமிழ்நூல்களில், மிகப் பழமையானதும் தலைசிறந்து நிற்பதுமான தொல்காப்பியத்தில், 'சிவ' என்னும் வேரினின்று தோன்றியுள்ள 'சிவணிய' 'சிவணி' 'சிவணும்' என்னும் சொல் (இருபது நூற்பாக்களுக்கு மேலேயே), பல இடங்களிற் காணப் படுகின்றன. மேலும்,

"கொடிநிலை கந்தழி வள்ளி யென்ற
வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும்
கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே."

—தொல். பொருள். அஅ.

"மாயோன் மேய காடுறை உலகமுஞ்
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெருமணல் உலகமும்
முல்லை குறிஞ்சி மருதம் நெய்த லெனச்
சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே."

—தொல். பொருள். ரு.

"பாங்கருஞ் சிறப்பிற் பல்லாற் றானும்
நில்லா வுலகம் புல்லிய நெறித்தே." —தொல். பொருள். எஅ.

"நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திர மென்ப." —தொல். பொருள். சகo.

என்னும் நூற்பாக்களுக்கு, சமயத்தொடர்புடைய பொருள்களைத்தவிர வேறு பொருள் கொள்வதிற்கிடமில்லை. இன்னும், அறம், அருள், வேலன், ஓம்படை, பால்வரைதெய்வம், சேயோன் (முருகன்), மாயோன் (திருமால்) முதலிய சொற்கள் காணப்படுவனவற்றினின்றும், தொல்காப்பியர் காலத்திலும் சைவ சமயமே நம்நாட்டில் நிலவியிருந்தது என்பது வெள்ளிடைமலை போல் தெரிகின்றது. சங்க இலக்கியங்களுள் பத்துப்பாட்டு, புறநானூறு, கலித்தொகை, சிலப்பதிகாரம், மணிமேகலை முதலிய நூல்களிலிருந்து அக்காலத்தில் முக்கண்ணன் (சிவன்) வணக்கம் மக்களிடம் ஊன்றியிருந்ததென்பது வெளிப்படை. திருக்குறளிலும், இறைவனை எண்குணத்தானென்றழைப்பதனாலும், 'அ' (எட்டு) என்னும் குறியே அகரத்திற்கும் குறியீடாய் அமைந்திருப்பதனாலும், இங்கு விரிக்க இடங்கொடாத பல காரணங்களினாலும், அது சமயத்தொடர்புடைய நூல் என்பது நன்கு விளங்கும். பத்துப்பாட்டு, இராமாயணம், பாரதம் முதலிய நூல்களிலும் சிவவழிபாடும் அறக்கடவுளின் பெருமையும் ஆங்காங்கு எடுத்து ஓதப்பட்டுள்ளது. பின்னர், மணிவாசகப்பெருமான், மெய்கண்டதேவர், சேக்கிழார், தாயுமானவர், பட்டினத்தடிகள், சிவஞானமுனிவர், குமரகுருபரர் முதலிய தெய்வப்புலவர்கள் பலரும் ஒருங்கே, சைவசமயக் கொள்கையைக் கடைப்பிடித்து, மீளா அடியர்களாய் உய்ந்து நம்மனோர்க்கு வழிகாட்டியர்களாய் அமைந்துள்ள தனிப் பெருமை அவர்களின் திருமொழிகள் மூலமாய்க் கலங்கரை விளக்கென, உலகமெங்கும் ஒளிர்ந்து கொண்டிருப்பதை உணர்ந்து இன்புறாமலிருக்கமுடியுமா? சமயம் வந்துழி விரித்துரைக்கப்படும்.

சைவத்தின் தொன்மை, பதினாயிரம் ஆண்டுகளுக்கு முந்தியதென்பது இங்கு எடுத்துக்காட்டப்பட்டது. இன்னும் எத்துணைப் பல்லாயிரமாண்டுகளுக்குமுன் சைவசமயம் உலக மக்களிடம் ஊன்றியிருந்ததென்பதை வரலாற்றுச் சான்றுகளோடு ஆராய்ந்து தெளிவது தமிழர்களும் தமிழன்பர்களும் ஆற்றவேண்டிய முதற்கடமையாகும்.

---

# *அறிவு விளக்கம்

[திரு. வித்துவான், கு. சுந்தரமூர்த்தி, செந்தமிழ்க் கல்லூரி,
திருப்பனந்தாள்.]

செந்தமிழ் நலனும், தெய்வத் திறனும் ஒருங்கமையப் பெற்ற பெரியோர்களே! தாய்மார்களே! உங்களனைவருக்கும் எளியனது வணக்கத்தை முதற்கண் தெரிவித்துக்கொள்கின்றேன்.

அறிவுவிளக்கம் என்ற தலைப்பிலே அறிவாவது யாது என்பதைப் பற்றியும், அது விளக்கம் பெறுமாறு யாங்ஙனம் என்பது பற்றியும் உங்கள்முன் சிந்திக்க முன்வந்திருக்கின்றேன். அறிவாவது யாது என்பதைப்பற்றி நாம் சிந்திக்க வேண்டுவதில்லை; நம் அருமைத் திருவள்ளுவர் தாமியற்றிய திருக்குறளிலே பலவிடங்களில் மிகத் தெளிவாகக் கூறியிருக்கின்றார். அவற்றை ஈண்டு ஒருங்கு சிந்தித்தல் தக்கது என்று எண்ணுகின்றேன்.

**அறிவு**

பெரியோர்களே!

பிறப்பென்னும் பேதைமை கெடச் சிறப்பென்னும் செம்பொருளைக் காணத்தக்கதாய், எவ்வதுறைவது உலகம் உலகத்தோடு, அவ்வதுறையும் அருமைப்பாடுடையதாய், உலகந் தழீஇய நட்பிலே முன்மலர்தலும் பின்கூம்புதலுமின்றி, எஞ்ஞான்றும் ஒருதன்மைத்தாய் இலங்குவதாய், எண்பொருளவாகச் செலச் சொல்லித் தான் பிறர்வாய் நுண்பொருள் காணும் நுண்மையுடையதாய், எப்பொருள் எத்தன்மைத் தாயினும், எப்பொருள் யார்யார் வாய்க் கேட்பினும், அவ்வப்பொருளினும், அவ்வவர் வாயினும் உண்மையையே கொண்டு விளங்கும் ஒண்மையுடையதாய், குதிரையை நிலமறிந்து செலுத்தும் வாதுவன்போல, மனத்தைப் புலமறிந்து செலுத்தும் புகழ்மையுடையதாய் விளங்குவது எதுவோ, அதுவே அறிவாகும் என்பது அவர் கண்ட உண்மையாகும்.

**மெய்யுணர்வு**

இத்தகைய அறிவு விளக்கமே நமக்கு இன்றியமையாது வேண்டப்படுவதாகும். இயற்கை யறிவை எல்லோரிடத்திலும்

---

* நெல்லைச் சித்தாந்த வகுப்பில் நிகழ்த்திய சொற்பொழிவு.

காண்டல் இயலுமேயன்றி, இவ்விளக்க அறிவை எல்லோரிடத்தி லும் காண்டல் இயலாததாகும். அதற்குக் காரணம் பல உளவேனும், தலையாய காரணம் தருக்குடைமையேயாகும். அத் தருக்கு என்னுந் திரையே, மெய்யறிவை மறைத்து, பொய் யறிவை மிகுத்து வருகின்றது. அப்படலமானது நீங்கி, உண்மையறிவை, மெய்ஞ்ஞானத்தைப் பெறவேண்டு மென்றே, அருட்டிரு குமரகுருபர அடிகளாரும் "ஆணவமான படலங் கிழித்து, அறிவிற் காணரிய மெய்ஞ்ஞானக் கண் காட்ட," வேண்டுமென்று, ஆண்டவனிடத்து வேண்டுகின்றார். ஆணவம் நீங்கிய உள்ளமே அன்பிற்கு இருக்கையாகின்றது; அடிமைத் திறத்திற்குக் குடிமையாகின்றது. ஆண்டவனைக் காணும் அருள்நிலை எய்துகின்றது. அத்தகைய அடியவர் கூட்டுறவே, நம் அகந்தையை நீக்கவல்லது, அறிவை விளங்கச் செய்வது. அவ்வாறு அடியவர்களைக் கூடுகின்றபோது, வேற்றுமையின்றி அரன் எனவே அவர்களைத் தொழ, நம் மனத்தகத்திருக்கும் மாசுநீங்கும். இதுவே நம் அகந்தையை நீக்க ஆன்றோர்கள் கண்டவழியாகும்.

எனவே, இதுகாறும் உங்கள்முன் கலந்து சிந்தித்ததி லிருந்து மெய்யறிவு என்பது எது என்பதும், அவ்வறிவை விளங்கவொட்டாது ஆணவம் என்பது மறைத்து நிற்கின்றது என்பதும், அவ்வாணவம் நீங்கி உண்மையறிவைப் பெற அடிய வர் கூட்டுறவே சிறந்த கருவியாகும் என்பதும் தெரியவரு கின்றது என்பதைக் கூறிக்கொண்டு, இத்தகைய பெரும் பேற் றிற் கெல்லாம் ஆளாக்கிய எங்கள் காசி வாசி ஸ்ரீலஸ்ரீ எசமான் சுவாமிகள் அவர்களின் திருவடிகட்கும், தமிழும் சைவமும் தழைக்க வுழைக்கும் தென்னிந்திய சைவசித்தாந்த சங்கத்தின ருக்கும், இவ் வகுப்புச் செம்மையுற நடக்கப் பல்லாற்றானும் பேருதவி புரிந்துவரும் நெல்லை அருணகிரி இசைக் கழகத்தாருக் கும் எனது மனமொழி மெய்களால் வணங்கும் வணக்கத்தை யும் நன்றியறிதலையும் தெரிவித்துக்கொண்டு அமைகின்றேன்.

---

## கைகொடுத்தருளல்

"இருடரு துன்பப் படல மறைப்பமெய்ஞ் ஞானமென்னும்
பொருடரு கண்ணிழந் துண்பொருள் நாடிப் புகலிழந்த
குருடருந் தம்மைப் பரவக் கொடுநர கக்குழிநின்
றருடரு கைகொடுத் தேற்றுமை யாற னடித்தலமே."

—ஆளுடைய அரசு, ச. கஉ-ச.

---

## தென்னிந்திய தமிழ்ச்சங்கம்

# புலவர் மாணவர் தேர்வு முடிவறிக்கை

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக அறநிலையங்களில் ஒன்றான தென்னிந்திய தமிழ்ச் சங்கத்தின் சார்பில் சென்ற ஆண்டுபோல் இவ் யாண்டும், சென்னைப் பல்கலைக்கழக வித்துவான் பட்டத் தேர்வுக்கும், வித்துவான் முதனிலைத் தேர்வுக்கும், வித்துவான் புகுமுகத் தேர்வுக்கும் விண்ணப்பித்துள்ள மாணவர்களின் நற்றமிழ் வளர்ச்சி கருதி, திருவையாறு, திருப்பனந்தாள், தருமபுரம், திருமயிலம், திருப்பதி, திருநெல்வேலி, மேலச்சிவபுரி ஆகிய ஏழிடங்களில், 1952 பிப்ரவரி 18உ முதல் புலவர் மாணவர் தேர்வுகள் நடைபெற்றன.

| | விண்ணப்பித்தவர் | எழுதியவர் | தேர்ச்சியுற்றவர் |
|---|---|---|---|
| வித்துவான் இறுதிநிலை | 18 | 12 | 12 |
| வித்துவான் முதனிலை | 50 | 43 | 39 |
| வித்துவான் புகுமுகம் | 49 | 48 | 44 |

இவர்களில்:—

**I. வித்துவான் இறுதிநிலைப் பரிசு பெறுபவர்கள் :**

பதிவெண் 36. பே. மு. இராசகோபாலன், K. V. S. S. கல்லூரி திருப்பனந்தாள் முதற் பரிசு ரூ. 50 0 0

பதிவெண் 29. இராம. சீனிவாசன், K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள் இரண்டாம் பரிசு ரூ. 40 0 0

பதிவெண் 28. சீ. பஞ்சாபகேசன், அரசர் கல்லூரி, திருவையாறு மூன்றாம் பரிசு ரூ. 30 0 0

**II. வித்துவான் முதனிலையிற் பரிசு பெறுபவர்கள் :**

பதிவெண் 80. சா. நாகலிங்கம், ஸ்ரீமத். சிவஞானபாலயசுவாமிகள் தமிழ்க்கல்லூரி, மயிலம், முதற் பரிசு ரூ. 40 0 0

பதிவெண் 89. ம. நல்லசாமி, திருவாவடுதுறை ஆதீன அம்பலவாண தேசிகர், கரந்தைப் புலவர் கல்லூரி, இரண்டாம் பரிசு ரூ. 30 0 0

பதிவெண் 53. அ. பாலசுப்பிரமணியன், K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள் மூன்றாம் பரிசு ரூ. 25 0 0

**III. வித்துவான் புகுமுகத்தேர்விற் பரிசு பெறுபவர்கள் :**

பதிவெண் 50. ந. பாலம்மாள், திருவள்ளுவர் தமிழ்ப் புலவர் கல்லூரி, திருநெல்வேலி முதற் பரிசு ரூ. 20 0 0

பதிவெண் 92. த. செயராமன், S. V. O. கல்லூரி, திருப்பதி இரண்டாம் பரிசு ரூ. 15 0 0

பதிவெண் 80. வ. கலியமூர்த்தி, K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள் மூன்றாம் பரிசு ரூ. 10 0 0

பரிசு பெறுகின்றவர்கட்கும், மற்றும் தேர்ச்சியுற்றவர்களுக்கும் தகுதித் தாள்களும் வழங்கப்படும்.

---

### தென்னிந்திய தமிழ்ச்சங்கம்

1952 (பிப்ரவரி 18-முதல்) மாசித் திங்களில் நடத்திய

# புலவர் மாணவர் தேர்வுத் தகுதி விளக்கம்

## தேர்ச்சியுற்றுத் தகுதித்தாள் பெறுபவர்கள்

## வித்வான் இறுதிநிலை

| பதிவெண் | பெயர் | தேர்ச்சி விழுக்காடு முறை |
|---|---|---|
| | **முதல் தகுதி** | |
| 32. | தி. சுப்பிரமணியன் | —K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள். |
| | **இரண்டாம் தகுதி** | |
| 30. | ம. ரா. கிருஷ்ணமூர்த்தி | ,, |
| 19. | வே. இராமச்சந்திரன் | —S. V. O. கல்லூரி, திருப்பதி. |
| 31. | அ. ஆடியபாதம் | —K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள். |
| 24. | சி. நடராஜன் | —அரசர் கல்லூரி, திருவையாறு. |
| 33. | க. சாமிநாதன் | —K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள். |
| 34. | க. கோன்னையாண்டி | — ,, |
| | **மூன்றும் தகுதி** | |
| 22. | க. சேதுராமலிங்கம் | —அரசர் கல்லூரி, திருவையாறு. |
| 20. | உ. க. கோவிந்தசாமி | —S. V. O. கல்லூரி, திருப்பதி. |

## வித்வான் முதனிலை

| பதிவெண் | பெயர் | தேர்ச்சி விழுக்காடு முறை |
|---|---|---|
| | **முதல் தகுதி** | |
| 44. | சு. சேனாபதி | —கீழ்த்திசைப் பல்கலைக் கல்லூரி, தருமபுரம். |
| 64. | அ. சௌந்தரநம்பி | —அரசர் கல்லூரி, திருவையாறு. |
| 79. | சு. இராமமூர்த்தி | —S. S. B. S. தமிழ்க் கல்லூரி, மயிலம். |
| 85. | கோ. ந. மங்கையர்க்கரசி | ,, |
| 54. | சோ. புண்ணியகோடி | —K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள். |

92. மோ. கருணைப்பிரகாசம்-கணேசர் செந்தமிழ்க் கல்லூரி, மேலைச் சிவபுரி.
70. அ. துரைராசன் —அரசர் கல்லூரி, திருவையாறு.
46. சி. சிவப்பிரகாசம் —கீழ்த்திசைப் பல்கலைக் கல்லூரி, தருமபுரம்.
81. ப. வேங்கடாசலம் —S. S. B. S. கல்லூரி, மயிலம்.

இரண்டாம் தகுதி

43. மு. ஏகாம்பரம் —கீழ்த்திசைப் பல்கலைக் கல்லூரி, தருமபுரம்.
51. தா. கேசவன் —K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.
42. அ. காந்திமதிநாதன் —கீழ்த்திசைப் பல்கலைக் கல்லூரி, தருமபுரம்.
60. போ. ஆதிகேசவலு —K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.
91. வே. பாலசுப்ரமணியம்-கணேசர் செந்தமிழ்க் கல்லூரி, மேலைச் சிவபுரி.
48. அ. சாமிநாதன் —K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.
75. சு. செயந்தீசுவரன் —அரசர் கல்லூரி, திருவையாறு.
61. சா. தா. திருஞானம் —K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.
59. வே. ரா. கண்ணப்பர்— ,,
57. கி. இராமசாமி — ,,
58. க. செயராமன் — ,,
90. மு. சேதுராமன் —கரந்தைப் புலவர் கல்லூரி, தஞ்சை.
84. வ. ரா. அரங்கநாதன் —S. S. B. S. தமிழ்க் கல்லூரி, மயிலம்.

மூன்றும் தகுதி

55. ச. சம்பூர்ணம் —K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.
77. பா. சின்னு —அரசர் கல்லூரி, திருவையாறு.
83. சி. கோபாலகிருட்டிணன் —S. S. B. S. கல்லூரி, மயிலம்.
63. ந. புதுவைநாயகம் —அரசர் கல்லூரி, திருவையாறு.
52. சா. சதாசிவம் —K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.

69. மூ. முத்து —அரசர் கல்லூரி, திருவையாறு.
74. பெ. சீரங்கன் — ,,
45. V. சபேசன் —கீழ்த்திசைப் பல்கலைக் கல்லூரி, தருமபுரம்.
66. கா. பண்டரிநாதன் —அரசர் கல்லூரி, திருவையாறு.
82. சா. ஆறுமுகம் —S. S. B. S. கல்லூரி, மயிலம்.
87. தெய்வ இராமநாதன் —கரந்தைப் புலவர் கல்லூரி, தஞ்சை.
71. வே. சுப்பு ரத்தினம் —அரசர் கல்லூரி, திருவையாறு.
88. அ. வெள்ளியங்கிரி —கரந்தைப் புலவர் கல்லூரி, தஞ்சை.
62. வே. சுப்பிரமணியன் —அரசர் கல்லூரி, திருவையாறு.
76. ந. கோடிப் பிள்ளை — ,,

## வித்வான் புகுமுகம்

### முதல் தகுதி

76. சு. சரஸ்வதி —K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.
78. வே. கோபாலகிருஷ்ணன் ,,
83. ச. சிவநேசன் — ,,
51. தி. ச. இலக்குமி —திருவள்ளுவர் தமிழ்ப் புலவர் கல்லூரி, திருநெல்வேலி.
81. க. அருணசலம் —K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.
82. ப. சத்தியமூர்த்தி — ,,
84. இரா. சங்கரநாராயணன் ,,
77. சி. கணேசன் — ,,
63. சோ. இராசு —அரசர் கல்லூரி, திருவையாறு.
62. சி. முத்துசாமி — ,,
52. ச. அரங்கம்மாள் —திருவள்ளுவர் தமிழ்ப் புலவர் கல்லூரி, திருநெல்வேலி.
95. அர. வரதராசன் —கீழ்த்திசைப் பல்கலைக் கல்லூரி, தருமபுரம்.
67. பெ. சௌந்தரராசன் —அரசர் கல்லூரி, திருவையாறு.
79. ச. விசாலாட்சி —K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.
74. ஆ. கலியமூர்த்தி — ,,

## இரண்டாம் தகுதி

55. சி. ஆறுமுகம் —அரசர் கல்லூரி, திருவையாறு.
61. வி. சண்முகசுந்தரம் — ,,
71. தி. ந. சிவசண்முகம் —K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.
72. சு. இளையபெருமாள் — ,,
75. இரா. சாமிநாதன் — ,,
86. வை. ஆதிமூல நாராயணன் ,,
94. வை. முத்தையன் —கீழ்த்திசைப் பல்கலைக் கல்லூரி, தருமபுரம்.
64. வ. இலக்குவன் —அரசர் கல்லூரி, திருவையாறு.
49. மு. க. இராமசாமி —கணேசர் செந்தமிழ்க் கல்லூரி, மேலைச் சிவபுரி.
59. தி. கணபதி —அரசர் கல்லூரி, திருவையாறு.
87. அ. சிதம்பரநாதன் —K. V. S. S. கல்லூரி, திருபனந்தாள்.

## மூன்றும் தகுதி

56. இரா. கலியமூர்த்தி —அரசர் கல்லூரி, திருவையாறு.
66. க. பண்டித மயில் வாகனன் ,,
89. போ. திருமங்கை ஆழ்வார் —S. V. O. கல்லூரி, திருப்பதி.
73. சே. சிவகுருநாதன் —K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.
53. கா. தமயந்தி —திருவள்ளுவர் தமிழ்ப் புலவர் கல்லூரி, திருநெல்வேலி.
60. ப. கௌரிசங்கரன் —அரசர் கல்லூரி, திருவையாறு.
96. P. சதாசிவன் —கீழ்த்திசைப் பல்கலைக் கல்லூரி, தருமபுரம்.
90. தே. விசுவநாதன் —S. V. O. கல்லூரி, திருப்பதி.
91. வே. அருணாசலம் — ,,
58. சே. மாணிக்கம் —அரசர் கல்லூரி, திருவையாறு.
85. வ. மணிவாசகன் —K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.
47. ந. பார்வதி —கணேசர் செந்தமிழ்க் கல்லூரி, மேலைச் சிவபுரி.
65. சே. அனந்தநாராயணன் —அரசர் கல்லூரி, திருவையாறு.
88. கோ. மு. ஆறுமுகம் —S. V. O. கல்லூரி, திருப்பதி.
93. அ. கந்தசாமி —கீழ்த்திசைப் பல்கலைக் கல்லூரி, தருமபுரம்.

---

# தென்னிந்திய சைவசித்தாந்த சங்கம்

## அறிக்கை

இச் சங்கச் சார்பில் புலமை பெற்றுள்ளவர்களும், புலமைப் பயிற்சியுறுகின்றவர்களும் உயிர்க்கு உறுதிபயக்கும் சித்தாந்த நூற்பாடங்களையும் பயின்று தேர்ச்சிபெறுவது சிறப்புடைத்து. அதுபற்றி முன் செல்வி இதழில் வெளியிட்டபடி சித்தாந்தத் தேர்வு 1952 ஜுலை 28க்குச் சரியான ஆடித்திங்கள் 13ம் நாள் சில புலவர் கல்லூரிகளிலும் வேறு குறித்த இடங்களிலும் சித்தாந்தத் தேர்வுகள் நடத்தப்பெறும். புகுமுகத் தேர்வுக்குக் கட்டணம் 0-8-0 வும், முதனிலைத் தேர்வுக்குக் கட்டணம் 0-12-0 வும், வித்துவான் இறுதிநிலைத் தேர்வுக்குக் கட்டணம் 1-0-0 வும் விதிக்கப்பட்டுள்ளன. தேர்வுக்குரிய விண்ணப்பங்கள் 28-6-52-க்குள் அனுப்பப்படவேண்டும்.

### இதன் சார்பில் 1952 பங்குனித் திங்களில் நடத்திய நீதி, சமய பாடத்தேர்வுத் தேர்ச்சிக்குறிப்பு

**திருநெல்வேலி மீனாட்சிபுரம், நகரமன்ற மகளிர் உயர்நிலைப்பள்ளி**

**மூன்றும் படிவம்**

1. சு. சரோஜா — முதற்றகுதி முதற் பரிசு ரூ. 5 0
2. ச. முத்துமீனா — முதற்றகுதி முதற் பரிசு ரூ. 5 0
3. சு. சுந்தராம்பாள் — இரண்டாந்தகுதி
4. V. பொன்னம்மாள் — இரண்டாந்தகுதி

**இரண்டாம் படிவம்**

வி. ஜானகி — இரண்டாந்தகுதி

**திருநெல்வேலி நகர்ப் பெரியதெரு 'செங்குந்தர் ஆரம்பப் பாடசாலை'**

**ஐந்தாம் வகுப்பு**

1. அ. பேச்சிமுத்து — முதற்றகுதி } தனித்தனி ரூ. 20 பரிசு
2. மு. சங்கர சுப்பிரமணியன் — முதற்றகுதி }
3. சோ. சங்கரலிங்கம் — முதற்றகுதி }
4. ஆ. நமசிவாயம் — இரண்டாந்தகுதி
5. ம. முருகேசன் — மூன்றாந்தகுதி

நெல்லை,
5-6-1952

**பு. சி. புன்னைவனநாதன்,**
புலவர் குழுத்தலைவர்.

# செய்திகளும் குறிப்புக்களும்

### தூத்துக்குடி சைவசித்தாந்த சபையின் 68-ஆம் ஆண்டு நிறைவு விழா

இவ்விழா நாளிது 1952, மே-24, 25-ஆம் நாட்களில் மிக்க சிறப்பாகக் குன்றக்குடி, திருவண்ணாமலை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ தெய்வசிகாமணி அருணாசல தேசிக சுவாமிகள் அவர்கள் தலைமையில் நடைபெற்றது.

இப்பேரவையைத் தேவகோட்டை "சித்தாந்தப் புரவலர்" "தமிழ் வள்ளல்" சிவத்திரு. சேவு. மெய்யப்ப செட்டியார் அவர்கள் தொடங்கி வைத்தார்கள். தொடக்கவுரை யொன்றும் அச்சிட்டு வெளியிடப்பெற்றது. 'திருவாவடுதுறை ஆதீனத் தேவாரப்' பாடசாலைத் தலைமையாசிரியர் சிவத்திரு. சுந்தர ஓதுவாமூர்த்தியவர்கள் முதலியோர்களால் திருமுறை பண்ணுடன் ஓதப்பெற்றது.

அண்ணாமலைநகர் R. C. T. உயர்நிலைப்பள்ளித் தலைமையாசிரியர் திரு. பு. ர. சாமிநாதன் எம். ஏ., எல். டி. அவர்கள், தேவகோட்டை 'சித்தாந்தப்புலவர் மாமணி' திரு. வயிநாகரம், வே. இராமநாதன் செட்டியாரவர்கள், குகத்திரு. முருக. கிருபானந்தவாரியாரவர்கள், திருவாடுதுறை ஆதீனச் சொற்பொழிவாளர் அம்பாசமுத்திரம், திரு. ஆ. முத்துக்குமாரசாமிப் பிள்ளையவர்கள், 'சித்தாந்த கலாநிதி' ஔவை திரு. சு. துரைசாமிப் பிள்ளையவர்கள், அண்ணாமலைநகர், 'சித்தாந்த கலாவல்லி' திருமதி. புர. சா. இராசேசுவரி அம்மையாரவர்கள், குலசைச் சித்தாந்த சைவப்புராணிகர், திரு. ச. முத்துக்குமார சுவாமி பிள்ளையவர்கள் ஆகியோர் முறையே "அப்பரருளிய ஒண்ணெறி" "சேக்கிழார் செய்யுள் மாண்பு" "பெருந்துணை" (தனிச்சொற்பொழிவு) "ஞானத்தமிழ்" "திருத்தொண்டின் உறைப்பு—ஞானப்பேறு" "அன்னையின் அருந்தமிழ்" "சூரபன்மன்—மயிலும் சேவலும்" (தனிச்சொற்பொழிவு) என்பன பற்றி நன்கு விரிவுரையாற்றினர்கள்.

சிவத்திரு. சுந்தரஓதுவாமூர்த்தி யவர்களாலும், கவுந்தம்பாடி நாட்டாண்மை உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியர், திரு. கோ. முருகையா முதலியோர்களாலும் திருமுறை இசையரங்கு இசைக்குழுவுடன் மிக்க சிறப்பாக நடைபெற்றது. அடிகளார் அவர்கள் அச்சிட்ட முன்னுரையும் அருளிய முடிப்புரையும் காலத்துக்கேற்றவாறு செந்நெறியோங்கிச் சிறக்கப் பன்னலம்

நிறைந்த பாங்கமைந்திருந்தமை பாராட்டற்குரியது எனப் பலரும் போற்றினர்.

அடிகளார் அவர்கள், சித்தாந்தப் பேராசிரியர், திரு. ந. சிவ குருநாத பிள்ளையவர்களுக்கு உயரிய பொன்னுடை போர்த்தி நல்லாசி வழங்கி அருளினார்கள்.

**கண்டனக் கூட்டம்**

1952-ஜூன், 22-ம் நாள் ஞாயிற்றுக்கிழமை மாலை ஏழு மணிக்குத் தூத்துக்குடி, திரு. சங்கரராமேசுவரர் திருக்கோவில் முன்மண்டபத்தில் சித்தாந்தப்பேராசிரியர் திரு. ந. சிவகுருநாத பிள்ளையவர்கள் தலைமையில் இந்து சமயிகளின் கூட்டம் கூடியது. அக்கூட்டத் தீர்மானம்:

வடக்கன்குளத்தில், திரு. ஆறுமுக நாவலரவர்கள் உண்மை உணரச்செய்து முன் அறியாது புகுந்த கிறித்துவர் சிலரை மீண்டும் சைவச் செந்நெறியிற் புகச்செய்தனர். அவர்களை இக்கூட்டம் பாராட்டுகின்றது.

'ஞானதூதன்' என்னும் வெளியீட்டில் 'யானைமேலம்பாரி' என்னும் தலைப்பில் குறித்த செய்தியை இழிவான முறையில் அவதூறு செய்திருப்பதை வன்மையாகக் கண்டிக்கிறது.

இதனைத் தீரஆய்ந்து வேண்டும் நடவடிக்கைகள் எடுத்தற் பொருட்டுக் கீழ்க்கண்ட தக்கார் குழு அமைக்கப்பெற்றுள்ளது.

தலைவர்: 'சித்தாந்தப் பேராசிரியர்' திரு. ந. சிவகுருநாத பிள்ளை அவர்கள்.

உறுப்பினர்: திரு. சிவ. ந. சின்னக்கண்ணுப் பிள்ளை B.A., B.L. அவர்கள், திரு. பூ. வண்ணமுத்து செட்டியாரவர்கள், திரு. A. R. A. S. ஆறுமுகசாமி நாடார் அவர்கள், திரு. சி. பழ. ராம. சிவராமன் செட்டியாரவர்கள், திரு. C. E. நாயகம் B. A. அவர்கள், திரு. கி. ச. சங்கரலிங்க நாடாரவர்கள், திரு. P. R. P. பெரியசாமி நாடாரவர்கள், திரு. E. வெண்ணிமாலைப் பிள்ளை B. A., B. L. அவர்கள், திரு. V. S. சண்முகம் பிள்ளையவர்கள் ஆகியோரும் இவர்களால் சேர்த்துக்கொள்ளப்படுவோரும் ஆவர்.

**வேகுப்பட்டித் "தமிழ் மன்றம்"**

நிகழும் திருவள்ளுவர் யாண்டு கக௮ந, ஆனித்திங்கள், கூ-ம் நாள் (22-6-1952) மாலை, 5 மணிக்கு மன்றச் சார்பாக, திரு. சொ. மாணிக்கம் அவர்கள் தலைமையில் திருவள்ளுவர் திருநாள் கொண்டாடப்பெற்றது.

திருவாளர்கள், சுப. சம்பந்தம், பெரி. திருநாவுக்கரசு, சே. மு. சிவலிங்கம், ஆ. பழ. குமரப்பன் முதலியோர், திருவள்ளுவர், திருக்குறள், திருவள்ளுவர் ஆண்டு முதலியன குறித்து விரிவுரை ஆற்றினார்கள். சில தீர்மானங்களும் நிறைவேற்றப்பட்டன. தீர்மானங்கள் வருமாறு:

"இந்திய அரசாங்கம் தமிழகத்து இந்தியைப் பரப்பும் நோக்கத்தோடு இரயில்வே, அஞ்சல் போன்ற பல்வேறு துறைகளில் அறிவிப்புக்களையும், பெயர்களையும் இந்தியில் எழுதியிருப்பதை நீக்கித் தமிழுக்கே முதலிடம் அளிக்குமாறும், பள்ளிகளில் சிறுவர்களுக்கு இந்தியைக் கட்டாய பாடமாக்குவதை நீக்கித் தமிழ்மொழியை ஊக்குவிக்குமாறும் அரசாங்கத்தினரை இக்கூட்டம் கேட்டுக்கொள்கிறது."

"பாராளுமன்றத்தில் எல்லா உறுப்பினர்கட்கும் புரியும் வகையில் ஆங்கிலத்தில் பேச மறுத்துத் தென்னிந்திய உறுப்பினரை அவமதிக்கு முறையில் அவர்கட்குப் புரியாத மொழியான இந்தியில் பேசுவதும், தென்னாட்டில் இந்தியை எதிர்ப்போர் ஒரு சிறு கூட்டம் எனத் தென்னிந்தியர்களின் தாய்மொழி யுணர்ச்சியினை அவமதிப்பதும் தான்நினைத்த போக்கு என இக்கூட்டம் கருதுகிறது."

"தமிழர்களாகிய நாம் தமிழ்மறை யருளிய திருவள்ளுவர் ஆண்டினையே கையாளுதற்குத் தமிழரின் நலங்கருதி யுழைக்கும் எல்லாத் தமிழ்ச்சங்கங்களும் வேண்டும் முயற்சி எடுத்து ஆவன புரியக் கேட்டுக்கொள்ளப்படுகின்றது. திருவள்ளுவர் திருநாளை ஓர் மாபெரும் தமிழ்த்திருநாளாகக் கொண்டாடவேண்டுமென்று தமிழ்ப்பெருமக்களைக் கேட்டுக்கொள்ளப்படுகின்றது."

திருவள்ளுவர் கழகம், தென்காசி
25-வது ஆண்டு நிறைவு வெள்ளிவிழா

இவ்விழா திருவள்ளுவர் ஆண்டு, ௧௯௮௩, வைகாசித் திங்கள் உரு, உசு, உஎ (7, 8, 9-6-'52) சனி, ஞாயிறு திங்கள் ஆகிய மூன்று நாட்களிலும் மிக்க சிறப்பாக நடைபெற்றுள்ளது. இம் மூன்று நாட்களிலும் முறையே திரு. சர். பி. டி. ராசன் அவர்கள், Bar-at-Law, M. L. A. மதுரை, திரு. அ. கி. பால் நாடார் அவர்கள் B.A., B,L., தூத்துக்குடி, திரு. R. P. சேதுப் பிள்ளை அவர்கள், B.A.,B.L., தமிழ்ப் பேராசிரியர், பல்கலைக் கழகம் சென்னை, திரு. சா. கணேசன் அவர்கள், காரைக்குடி, குன்றக்குடி, திருவண்ணாமலை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ தெய்வசிகாமணி அருணாசல தேசிக சுவாமிகள் அவர்கள் தலைமை ஏற்றுச் சிறப்புடன் நடத்தியுள்ளார்கள். பல்வேறு துறையில் பல்வேறு

பட்டமும் பயிற்சியும் பண்பும் அமைந்த நாவன்மையும் பாவன்மையும் ஒருங்கமைந்த சான்றோர் பலர் பல அரும்பெரும் விரிவுரைகள் ஆற்றி அணிசெய்துள்ளார்கள். மேலும் ஒவ்வொரு நாளும் திருமுறை இசையும், இசைச் சித்திரமும், நாடகம், நடிப்பு முதலியவைகளும், தனி இசையரங்கும் பிறவும் மாண்புற நிகழ்ந்துள்ளன.

**திரு. சி. குப்புசாமி நாயுடு ஞாபகார்த்தப் பிரசவ ஆஸ்பத்திரித் திறப்புவிழா**

குறித்த பிள்ளைப்பேற்று நிலையம் பெருவள்ளல் நாயுடு அவர்கள் நினைவு நிலையமாக நிலவுகின்றது. இந்நிலையத்திற்கென நிறுவிய அறங்காவல் திருவினர் அரசியலார் நன்கொடை உதவியும் பெறாது வள்ளலாரின் அறப்பெரும் செல்வத்தினின்றே செய்தமைந்த ஆண்மை அருஞ்செயல் மிகவும் போற்றத்தக்கது. இந்நிலையத்திற்கு இதுகாறும் எட்டரைலட்ச ரூபாய் செலவாகியிருப்பதாகத் தெரிகிறது. மேலும் பெரும்பொருள் செலவாகவும்கூடும்.

இந்நிலையம் கோயமுத்தூரில் சூன், 30-ம் நாள் திறக்கப்பட்டது. மைசூர் அரசப்பிரமுகர் இதனைத் திறந்துவைத்தார்கள். அவர்களுக்குக் குறித்த அறநிலை ஆட்சிப் பொறுப்பாளர் திரு. சி. கே. தேவராசலு நாயுடு வரவேற்பு படித்தளித்தார்கள். சென்னைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் டாக்டர், ஏ. இலட்சுமணசாமி முதலியாரவர்கள் தலைமை பூண்டார்கள். இவர்களே திரு. சி. குப்புசாமி நாயுடு அவர்களின் திருவுருவப் படத்தைத் திறந்துவைத்தார்கள்.

இந்நிலையம் பன்னிரண்டு ஏக்கர் நிலத்தில் கட்டப்பட்டிருக்கிறது. நூறு படுக்கைகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. இவற்றில் அறுபது ஏழைகளுக்கு. இருபது பணம் கொடுக்கும் தகுதி வாய்ந்த செல்வர்களுக்கு. இருபது குழந்தைகளுக்கு. இதன்கண் உண்டி, உடை, உறையுள்கள் நல்கப்படும். மருத்துவர்களுக்கும் செவிலித்தாயர்களுக் (Nurse) கும் இங்குப் பயிற்சி அளிக்கப்படுமெனவும் தெரிகிறது.

**தூத்துக்குடி, சைவசித்தாந்த சபையினரின் வேண்டுகோள்**

சித்தாந்தப் பேராசிரியர் சிவத்திரு. ந. சிவகுருநாதபிள்ளையவர்களைத் தமிழுலகமும் சித்தாந்த உலகமும் நன்குணரும். அப்பெரியார்க்கு வரும் ஆடித்திங்கள் க௦-ம் நாள் (25-7-1952) எண்பதாம் அகவை தொடங்குகிறது. அந்நாளில் ஒரு பெரும் பேரவை கூட்டிப் பொற்கிழி நல்கிப் போற்றுத புரியத் தீர்மானித்துள்ளார்களாம்.

தூத்துக்குடிச் சைவசித்தாந்த சபையே ஏனைச் சபைகட்குத் தாயனையதாகும். சங்கங்களும், தமிழன்பர்களும், சித்தாந்தச் செல்வர்களும் பொன்னும் வாழ்த்தும் பொருந்திய தொண்டும் புரிந்து போற்ற வேண்டப்படுகின்றார்கள்.

குறிப்பு : புலமை யொடுபண்பு போதிக்கும் செம்மை
நிலவுபெரி யார்க்களித்தல் நேர்.

**தமிழ் பரப்புங் கழகம், சிங்கப்பூர்**

கடல் கடந்து நெடுஞ் சேய்மைக்கண் செந்தமிழ்ப் பீடுடன் வாழும் அருந்தமிழன்பர்கள் தாய்மொழியாந் தமிழ்மொழியை வேற்று மொழியாளரிடமும் வியத்தகுமுறையில் பரப்ப முன் வந்து முயலும் நயத்தகு செய்தி நம்மனோரால் மிகமிகப் பாராட்டற்குரியது ஒன்றாகும். இக்கழகத்தாரின் மெய்ம்மைக் குறிக்கோள் வருமாறு :

மலாயா பெடரேசனிலும், சிங்கப்பூரிலும் வாழும் தமிழரல்லாதாரிடையே உலகத்திலேயே மிகவும் தொன்மைவாய்ந்த தமிழருக்கேயுரிய பொதுமைநலம் யாண்டும் பொதுளிய தமிழரின் தனித்தியங்கும் இனித்தமுடைய மொழி, கலை, கலையொழுக்கு, பண்பாடு, நனிநாகரிகம் முதலிய சிறந்த குறிக்கோள்களைப் பரப்புதல்.

அதன்பொருட்டுத் தமிழில் உயிர்ப்புடன் நிலவிவரும் நூல்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துப் பரப்புதல். துண்டு வெளியீடுகள், வெளியீடுகள், வானொலிப் பேச்சுக்கள் முதலிய வற்றாலும் பரப்புதல். இதன் ஆக்கம் குறித்தமைத்த குழுவும் பிறவும் தக்கவாறுழைத்துத் தமிழை யெங்கணும் பரப்பி யாவரும் ஒற்றுமையுற்று வாழத் தமிழ்த்தாய் தண்ணருள் புரிவாளாக. கழகம் சிறந்தோங்குக. கன்னித் தண்தமிழ் வாழ்க. சௌந்தரராசன் தனித்தொண்டு வெல்லுக.

**இலங்கை இசுலாமிய அன்பர் வேண்டுகோள்**

செந்நாப் புலமைவாய்ந்த செல்வர்பாலிருந்து வெளிவரும் புலவர் வரலாறுகளுடன் ஒத்துத் தூத்துக்குடிச் 'சித்தாந்தப் பேராசிரியர்' திரு. ந. சிவகுருநாதபிள்ளையவர்கள் "**நான் கண்ட புலவர்பெருமக்கள்**" என்று 'செல்வி'யில் வரைந்துள்ள கட்டுரையை மிகவும் பாராட்டிக் கொழும்பு திரு. எப். எம். இபுறாகிம் அவர்கள் எழுதியதோடு மேலும் அவர்களேனும், பிறபுலவர்களேனும் இசுலாமியப் புலவர்கள் வரலாறுகளைச் 'செல்வி' வாயிலாக வெளியிடுமாறு விழைகின்றார்கள்.

குறிப்பு : அவ்வண்ணம் செய்யவேண்டுமென இதனைக் கண்ணுறும் அன்பர்களை வேண்டுகின்றோம்.

**மத்திய அரசியலும் ஹிந்திப் பிடிவாதமும்**

மத்திய அரசியலில் குறிப்பாகத் தென்னாட்டவரையும் பொதுவாக வேற்று மொழியாளர்களையும் பொருட்படுத்தா முறையில் இந்தியை வலுகட்டாயமாகத் திணித்துப் பேசுகின்றனர். இது மொழிவளர்ச்சிக்கும் பெருநாட்டின் ஒற்றுமைக்கும் ஊறு விளைப்பதாகுமென்பதை உணரல்வேண்டும். மத்திய சட்டசபைக் கூட்டத்தில் இந்தியில் பேசியதைக் கண்டித்துத் தென்னிந்திய மெம்பர்கள் வெளியேறினர். இவ் வெளியேறிய உறுப்பினர்க்குத் தலைமை பூண்டவர் சென்னையைச் சேர்ந்த டாக்டர் ஏ. கிருட்டிணசாமியும், திருவாங்கூரைச் சார்ந்த மிஸ் அன்னிமாஸ்கரினும் ஆவர். சில காங்கிரசு மெம்பர்களும் வெளியேறினதாகவும் தெரிகிறது.

**'இந்தி ஆவேசம் தீமையே விளைவிக்கும்'**

சென்னை அசெம்பிளி உறுப்பினர் திரு. பி. டி. ராஜன் அவர்கள் கூறிய சுருக்கம்: இந்தியை முதன்மைப்படுத்த இரயில்வே மந்திரி திரு. லால்பகதூர் சாஸ்திரி அவ்வளவு வெறிக்கொப்பான உணர்ச்சிகளைக் காட்டவேண்டியதில்லை. இதனால் இந்தி இயக்கத்திற்குப் பாதகமே ஏற்படும்.

**இந்தி வெறிக்குக் கண்டனம்**

திரு. டி. ஆர். வெங்கட்டராம சாஸ்திரியாரவர்களின் அறிக்கையின் சுருக்கம்: நான் ஒரு தென்னிந்தியன். இந்தியை எதிர்ப்பவன் அல்லன். 1937-இல் காங்கிரசு மந்திரி சபை இந்தியைக் கட்டாய பாடமாக ஆக்கியதைத்தான் எதிர்த்தேன்.

இந்திய மத்திய அரசியலில் ஒரு மந்திரி பிறரை மதியாது இந்தியில் பேசியதை எதிர்த்து வெளியேறிய உறுப்பினர்களை நான் ஆதரிக்கிறேன். அவர் உரிமையைவிடக் கடமையைப் பெரிதென உணர்ந்திருக்கவேண்டும். தலைவர் உணர்த்தியிருக்க வேண்டும்.

**இந்தியைத் திணித்தல் தீங்கு**

உதவி ராஷ்டிரபதி திரு. ராதாகிருஷ்ணன் அவர்கள் எல்லாருக்கும் புரியக்கூடிய பாஷையில் விவாதிப்பதுதான் முறைமை. சிலர்க்கோ அல்லது பெரும்பான்மையோர்க்கோ புரியவில்லை என்றால் அந்த விவாதத்தால் பயனில்லை.

இந்தியைப் பரப்பும் சிறந்த நோக்கமுடையவர் அதனை அறியாதவர்கள்மீது திணிக்கக்கூடாது. அங்ஙனந் திணித்தால் அது அதிருப்தியையும் எரிச்சலையுமே ஏற்படுத்தும். இது தகுதியன்று.

**பிறமொழிச் சார்பில் இந்தி வளரவேண்டும்**

திரு. புருஷோத்தம தாஸ் டாண்டன் ஆங்கில இடத்தில் இந்தி வரவேண்டிய காலம் வந்துவிட்டது. ஆனல், பிறமொழிகளுக்குக் கேடு விளையும் நிலையில் இந்தியை வளர்த்தல் கூடாது. பிறமொழிகளைத் தூண்களாகக் கொண்டு இந்தி மண்டபம் எழுப்புதல் வேண்டும்.

**உலகப் பொதுமறைத் திருக்குறள் இந்திய மத்திய அரசியலில் நிலவல்**

பார்லிமெண்டில் திரு. தேஷ்முக் (சமக்கிருத வல்லுநர் பொருளமைச்சர்.)

“ இலமென் றசைஇ இருப்பாரைக் காணின்
நிலமென்னும் நல்லாள் நகும்.”

என்பதை இடத்துக்கேற்றவாறு தமிழிலேயே கூறி எல்லாரையும் இறும்பூதுறச் செய்தனர்.

**இந்தியப் பாராளும் மன்றத்தில் தமிழ் முழக்கம்**

கடந்த 4-7-52-ல் புதுடில்லி மக்கள் மன்றத்தில் கேள்வி நேரத்தின்போது, போக்குவரத்து அமைச்சர் திரு. லால்பகதூர் சாத்திரி அவர்கள் பேசிக்கொண்டிருந்தார். அப்போது சென்னையைச் சேர்ந்த திரு. பேபி கந்தசாமி என்னும் உறுப்பினர், அமைச்சரைத் தமிழில் ஒரு கேள்வி கேட்கவே, அவையிலிருந்தோர் அனைவரும் வியப்புற்றனர். பொதுவுடைமைக் கட்சியைச் சேர்ந்த திரு. அனந்தன் நம்பியாரும், காங்கிரசு உறுப்பினர் திரு. சி. ஆர் நரசிம்மனும், திரு. பேபி கந்தசாமி அவர்களின் பேச்சை மொழிபெயர்த்துக்கூற முன்வந்தனர். எனினும், மன்றத்தலைவர் இதனைப் பொருட்படுத்தாது அடுத்த கேள்விக்குப் போய்விட்டார்.

பின்னர் வெளியில் வந்த திரு. பேபி கந்தசாமி அவர்கள், “நான் இந்தி வெறியர்களுக்கு மாற்றுரையாக இனித் தமிழிலேயே பேசப்போகிறேன். இதனை மன்றத் தலைவரிடமும் கூறியுள்ளேன்” என்று கூறினர்.

---

திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர் : வ. சுப்பையா.



பேராசிரியர்:

கா. ர. கோவிந்தராச முதலியார் அவர்கள்

தோற்றம்:
**31—10—1874.**

மறைவு:
**12—7—1952.**